தீர்க்கமான ஆலோசனையுள்ளவர் ; தான் செய்யவேண்டிய காரியத்தை நன்றாய் நிச்சயித்துக்கொண்டவர். எவ்வித சத்துருக்களையும் அலக்ஷியமாய்க் கொல்லக்கூடியவர். ஆகையால், மிகவும் பயந்தவர்போல் சேஷ்டையற்று, 'ஒரு வேளை ராவணன் என்னைப் பார்க்க விரும்பி வருவிப்பான்' என்ற நம்பிக்கையால் சத்துருக்கள் தன்னைக் கட்டுவதையும் உபத்திரவிப்பதையும் லக்ஷியம் செய்யவில்லை. சணப்பக்கயிற்றால் கட்டப்பட்டவுடன் பிரம்மாஸ்திரத்திலிருந்து விடுபட்டார். அதனால் கட்டப்பட்டிருக்கும் பொழுது வேறொன்றால் கட்டினால் அந்த அஸ்திரத்தின் வீரியம் போய்விடும். ஹனுமான் சணப்பக்கயிற்றால் கட்டப்பட்டவுடன் பிரம்மாஸ்திரத்திலிருந்து விடுபட்டாரென்றறிந்து, மகா புத்திமானான இந்திரஜித்து, - "ஐயோ! இந்த அஸ்திரத்தை பிரயோகித்திருக்கும்பொழுது வேறொன்றால் கட்டக்கூடாது" என்ற மந்திர ரகசியம் இந்த மூடர்களுக்குத் தெரியவில்லையே! அருமையான அஸ்திரம் வீணாயிற்றே! என் உத்தேசமும் நிறைவேறாமல் போயிற்றே! இந்த அஸ்திரம் வீணானபிறகு வேறு அஸ்திரம் பிரயோஜனப்படாதே! சிரமப்பட்டுச் செய்த இந்தப் பெருங்காரியத்தைக் கெடுத்துவிட்டார்களே! பிரம்மாஸ்திரத்தை மறுபடியும் பிரயோகிக்கமுடியாது. இவன் அதிலிருந்து விடுபட்டபோதிலும் கட்டுப்பட்டவன்போல் காட்டிக் கொள்ளுகிறான். இதின் ரகசியம் எனக்குத் தெரியவில்லை. திடீரென்று கிளம்பி எல்லோரையும் நாசஞ்செய்தாலும் செய்வான்" என்று கவலை கொண்டான்.

ஹனுமான் தான் பிரம்மாஸ்திரத்திலிருந்து விடுபட்டதாய்க் காட்டிக்கொள்ளாமல், ராக்ஷஸர்கள் தன்னைக் கட்டியிருப்பதையும் தடிகளாலும் முஷ்டிகளாலும் அடிப்பதையும் பொறுத்துக்கொண்டிருந்தார். பிறகு அவரை ராவணனிருக்குமிடத்திற்குக் கொண்டு போனார்கள். அங்கே இந்திரஜித்து, "நமது சைன்யங்களையும் ஸேனாதிபதிகளையும் கொன்று அசோகவனத்தை அழித்த குரங்கைப் பாருங்கள்" என்று ராவணனுக்கும் மந்திரிகளுக்கும் மாருதியைக் காட்டினான். ஆனால், அவர் பிரம்மாஸ்திரத்திலிருந்து விடுபட்டும், ஏதோ காரணத்தால் கட்டுப்பட்டவர் போலிருக்கிறாரென்று அவனுக்கு நன்றாய்த் தெரியும். மயங்கின மதயானையைப் போல் கட்டுப்பட்டுக் கிடக்கும் அந்த வானரச்சிரேஷ்டனை ராக்ஷஸர்கள் ராவணனுக்குத் தெரிவித்தார்கள். அங்கிருந்த ராக்ஷஸ வீரர்கள் மாருதியைப் பார்த்து, "இவன் யார்? யாரைச் சேர்ந்தவன்?

எங்கிருந்து வந்தான்? இங்கே என்ன காரியம்? இவனுக்கு வேண்டியவர்கள் இங்கே யார்?'' என்று பலவிதமாய் ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டார்கள். பிறகு அவரைக்கண்டு கோபங்கொண்டு, "நமது பந்துக்களையும் மித்திரர்களையும் கொன்று நம்மை அவமானம் செய்த இந்தத் துஷ்டக் குரங்கை கொல்லுங்கள், கொளுத்துங்கள், தின்னுங்கள், சித்திரவதை செய்யுங்கள்'' என்று இரைந்தார்கள். அதைக் கேட்டுக் கொண்டே அந்த வானரவீரன் ராஜ மார்க்கத்தைதாண்டிச் சென்று, ராவணனுடைய காலடியில் வயது சென்ற மந்திரிகள் உட்கார்ந்திருப்பதையும் நவரத்தின சகிதமான அந்தக் கொலுமண்டபத்தின் அழகையும் பார்த்தார். விகார ரூபமுள்ள ராக்ஷஸர்களால் அங்குமிங்கும் இழுக்கப்பட்ட இந்த வானரச் சிரேஷ்டனை மஹாதேஜஸ்வியான ராவணனும் பார்த்தான். ஆஞ்ஜநேயரும் கொஞ்சங்கூடப் பயமில்லாமல் அந்த பிரதாப லங்கேசுவரனை உற்றுப் பார்த்தார். அவன் எல்லையற்ற தேஜஸூம் பலமும் பொருந்தி, ஸகலக் கிரணங்களுடன் ஜ்வலிக்கும் ஆதித்தியனைப்போல் பிரகாசித்தான். பிறகு ராக்ஷஸாதிபதி மாருதியைப் பார்த்துக் கோபத்தால் சிவந்த கண்களை உருட்டி விழித்து, தன் பாதத்தடியில் உட்கார்ந்திருக்கும் குலத்தாலும் ஆசாரத்தாலும் முதிர்ந்த மந்திரிகளை நோக்கி, "இவனுடைய வரலாற்றைக் கேளுங்கள்'' என்று ஆக்ஞாபித்தான். அப்படியே அவர்கள், "நீ யார்? இங்கே வந்த காரணமென்ன? இங்கே செய்யவேண்டிய காரியமென்ன?'' என்று கேட்க, ஆஞ்ஜநேயர், "நான் ஒரு தூதன்; ஸூக்ரீவ மஹாராஜாவால் அனுப்பப்பட்டேன்'' என்று சொன்னார்.

யதாக்ரமம் தை: ஸ கபிர் விப்ருஷ்ட:
கார்யார்த்த மர்த்தஸ்ய ச மூலமாதௌ |
நிவேதயாமாஸ ஹரீச்வரஸ்ய
தூத: ஸகாசா தஹமாகதோஸ்மி || (62)



# புத புக்தி

ஸ்ரீ ராமசந்த்ராய நம :

## ஸுந்தர காண்டம் — 54-வது ஸர்க்கம்

## ஹநுமார் லங்கையைக் கொளுத்தினது

வீக்ஷமாண ஸ்ததோ லங்காம் கபி : க்ருதமநோரத :
வர்த்தமான ஸமுத்ஸாஹ : கார்யசேஷ மசிந்தயத் (1)

"ஸீதையைக் கண்டு ராமனுடைய விருத்தாந்தத்தை அவளுக்குத் தெரிவித்து ஸமாதானம் செய்து, அவளுடைய விருத்தாந்தத்தைத் தெரிந்து கொண்டேன். ராக்ஷஸர்களுடைய பலாபலத்தைப் பரீக்ஷித்தேன். ராவணனைக் கண்டு பேசி அவனுடைய அபிப்பிராயத்தை அறிந்தேன். இனிமேல் செய்யவேண்டியது ஏதாவது பாக்கியுண்டோ ?" என்று ஆஞ்ஜநேயர், வரவர விருத்தியாகும் உத்ஸாகத்துடன் நான்கு புறங்களிலும் கவனித்துப் பார்த்தார். "இந்த ராக்ஷஸர்களை வருத்தப்படுத்தக் கூடிய காரியம் என்ன செய்யலாம் ? அசோகவனத்தை அழித்தேன் ; முக்கியமான ராக்ஷஸ வீரர்களைக் கொன்றேன் ; ஸைன்யங்களில் ஒரு பாகத்தை முடித்தேன் ; கோட்டையையும் அரண்களையும் அழிப்பதுதான் மிகுதி ; கோட்டையை அழித்தால் நான் இது வரையிலும் சிரமப்பட்டுச் செய்த காரியங்களெல்லாம் பிரயோஜனமாகும். இந்த விஷயத்தில் அதிக சிரமப்படாமல் உபாயத்தால் காரியத்தை முடிக்க வேண்டியது. என்னிடத்தில் பரமகிருபை செய்திருக்கிற அக்னி பகவானுக்கு இந்தப் பட்டணத்தை பலியாகக் கொடுத்துத் திருப்தி செய்வேனென்று முடிவு செய்தார்.

பிறகு, மேகங்களில் பாயும் மின்னலைப்போல், மாருதி எரிகிற வாலுடன் லங்கையிலுள்ள வீடுகளின்மேல் சஞ்சரிக்க ஆரம்பித்தார். ராக்ஷஸர்களுடைய வீடுகளையும் தோட்டங்களையும் மாளிகைகளையும் நன்றாய்ப் பார்த்துக்கொண்டு வீட்டிற்கு வீடு தாவினார். பிரஹஸ்தனுடைய வீட்டில் பாய்ந்து அதில் நெருப்பு வைத்தார். பிறகு மஹாபார்சுவன், வஜ்ரதம்ஷ்ட்ரன், சுகன், ஸாரணன், இந்திரஜித்து, ஜம்புமாலி, ஸுமாலி, ரச்மிகேது, சூரியசத்துரு, ஹ்ரஸ்வகர்ணன், தம்ஷ்ட்ரன், ரோமசன், யுத்தோன்மத்தன், மத்தன், த்வஜக்ரீவன், வித்யுத்ஜிஹ்வன், ஹஸ்திமுகன், காரளன், பிசாசன், சோணிதாக்ஷன், கும்பகர்ணன், மகராக்ஷன், யக்ஞசத்துரு, பிரம்மசத்துரு, நராந்தகன், கும்பன், நிகும்பன் முதலியவர்களுடைய வீடுகளையெல்லாம் வரிசையாகக் கொளுத்திக்கொண்டு வந்தார். தனக்கும் ஸீதைக்கும் ஹிதத்தைக்கோரின விபீஷணனுடைய கிருஹத்தை மாத்திரம் கொளுத்தவில்லை. அந்தந்த வீடுகளில் தன தான்யங்களாலும் வாகனங்களாலும் ஐசுவரியங்களாலும் விளங்கும் பாக்கியவான்களுடைய செல்வத்தை முற்றிலும் நாசம் செய்தார். பிறகு எல்லா வீடுகளையும் தாண்டி, ராக்ஷஸாதிபதியான ராவணனுடைய வீட்டிற்கு வந்தார். என்ன தைரியம்! ஸகல லோகங்களிலும் ஒப்பில்லாத அந்த அரண்மனை பலவகை ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டு மேருமந்திர பர்வதங்களைப் போல் ஆகாசத்தையளாவி, ஸகல மங்கள திரவியங்களாலும் விளங்கினது. அந்த ராஜகிருஹத்தில் மாருதி தன் வாலில் எரியும் நெருப்பை வைத்துக் கர்ஜித்தார்.

உடனே அக்னிபகவான் வாயுவுடன் சேர்ந்து காலாக்னியைப் போல் ஜ்வலித்து விருத்தியடைந்தார். வாயு அந்த நகரத்திலுள்ள வீடுகளிலெல்லாம் நெருப்பைப் பரவச் செய்து அதிவேகமாய் வீசினார். முத்து ஹாரங்களாலும் ரத்தினங்களாலும் ஸ்வர்ண ஜன்னல்களாலும் பிரகாசிக்கும் பெரிய வீடுகள் சாம்பலாயின. புண்ணியத்தால் சுவர்க்கத்தை அடைந்தவர்களுடைய விமானங்கள் புண்ணியகர்மங்கள் முடிந்தவுடன் பூமியில் விழுவதுபோல், வீடுகளின் விமானங்கள் வெடித்து விழுந்தன. ராக்ஷஸர்கள் தங்களுடைய வீடுகளைக் காப்பாற்றுவதில் உத்ஸாகமுற்று அங்குமிங்கும் ஓடிக்கொண்டு "ஐயோ! இங்கே வந்தது குரங்கல்ல. அக்னியே இந்த ரூபமெடுத்து வந்திருக்கிறான். என்ன கஷ்டம்," என்று பெருங்கூச்சலிட்டார்கள். மெத்தை வீடுகள் நெருப்புப் பிடித்த

வுடன்அங்கிருந்து சில ஸ்த்ரீகள் தலைமயிர் அவிழ்ந்து அலங்கோலமாய்க் குழந்தைகளை எடுத்துக்கொண்டு, மேகங்களிலிருந்து விழும் மின்னற்கொடிகளைப்போல் கீழே விழுந்தார்கள். வஜ்ரம், பவழம், முத்து, வெள்ளி முதலியவைகளால் விசித்திரமாகக் கட்டப்பட்ட வீடுகளும் அங்குள்ள பொன் வெள்ளி முதலிய தாதுக்களும் உஷ்ணத்தால் உருகுவதை மாருதி கண்டார். கட்டைகளாலும் செத்தைகளாலும் அந்த நெருப்பு எப்படித் திருப்தியடைய வில்லையோ அப்படியே அக்னியால் மரணமடைந்த ராக்ஷஸர்களால் பூமிக்கும் ஹனுமானுக்கும் திருப்தியுண்டாகவில்லை. லங்கை முழுவதும் நாசமடைந்தால் ஒருவேளை திருப்தியடைந்திருப்பார். அக்னி ஜ்வாலைகள் சிலவிடங்களில் பலாச புஷ்பங்களைப் போலவும், சிலவிடங்களில் இலவம் புஷ்பங்களைப்போலவும் சிலவிடங்களில் குங்குமத்தைப் போலவும் காணப்பட்டன. பூர்வகாலத்தில் ருத்திரன் திரிபுரங்களை எரித்ததுபோல் ஹனுமான் லங்கையை எரித்தார்.

பிறகு ஆஞ்ஜநேயர் திரிகூடமென்ற பர்வத சிகரத்திற்குப் போனார். அவரால் வைக்கப்பட்ட அக்னி லங்கையில் எல்லா விடங்களிலும் பரவி, பர்வதத்தில் நெருப்பிருக்கிறதென்ற தர்க்க சாஸ்திர நியாயத்தை லோகத்தாருக்குக் காட்டுவது போலிருந்தது. ராக்ஷஸ கிருஹங்களில் பிடித்த அக்னி ஆகாசத்தையளாவி, புகையில்லாமல் கொழுந்துவிட்டெரிந்து ராக்ஷஸர்களுடைய சரீரமென்ற நெய்யால் விருத்திசெய்யப்பட்டது. அதுவரையில் ராவணனுக்குப் பயந்திருந்த வாயுவும் அக்னியும் ஹனுமானால் பயந்தீர்ந்து ஒன்று சேர்ந்து பிரளயகாலாக்னிபோல் லங்கையை நாசஞ்செய்ய ஆரம்பித்தார்கள். கோடி சூரியதேஜஸுடன் அந்தப் பெருந்தீ லங்கையில் ஓரிடம் பாக்கியில்லாமல் பரவிற்று. அங்கங்குள்ள ஸகல பதார்த்தங்களும் வெந்து வெடிப்பதாலுண்டான சப்தம் பிரம்மாண்டத்தைப் பிளப்பது போலிருந்தது. பலாசபுஷ்பங்களைப் போன்ற ஜ்வாலைகளுடன் அக்னிபகவான் ஆகாசம்வரையில் வளர்ந்து ஓங்கினார். அணைந்த புகையால் மேகங்களும் மறைக்கப் பட்டுக் கருநெய்தல் புஷ்பங்களைப்போல் காணப்பட்டன.

லங்கையிலுள்ள பிராணிகளும் வீடுகளும் விருக்ஷங்களும் அதிசீக்கிரமாய் எரிந்ததைக் கண்டு அங்குள்ள அநேக புத்திமான் கள்;"வஜ்ஜிராயுதத்தைத் தரித்த தேவராஜனோ? விருத்ராஸுரனைக்

கொன்ற மஹேந்திரனே? வருணனே? வாயுவோ, ருத்திரனே, அக்னியோ, சூரியனே, குபேரனே அல்லது ஸாக்ஷாத் காலனே? அல்லது ஸகல லோகங்களையும் சிருஷ்டித்த பிரம்மதேவருடைய கோபம் இந்த வானரரூபமெடுத்து ராக்ஷஸர்களை நாசம்செய்ய இங்கே வந்திருக்கிறதோ? அல்லது, தேசகாலவஸ்துக்களுக்குப் புறம்பாயும், இந்திரியங்களுக்கும் மனதிற்கும் எட்டாததாயும், ஒன்றாயுமிருக்கும் மஹாவிஷ்ணுவின் அற்புதமான தேஜஸே தன் மாயையால் ராக்ஷஸர்களை அழிக்க இப்போது இந்த வானரரூபமெடுத்து வந்திருக்கிறதோ?" என்று சொல்லிக்கொண்டார்கள்.

ராக்ஷஸர்களும், குதிரைகளும், யானைகளும், பக்ஷிகளும், மிருகங்களும், விருக்ஷங்களும் இன்னும் லங்கையிலுள்ள ஸகல பதார்த்தங்களும் ஹனுமானால் நாசமடைந்து, அந்த நகரம் கேட்போர் பரிதபிக்கும்படி கதறிற்று. "குழந்தாய், அப்பா, நாதா, அன்பா! அநியாயமாய் இறந்தீர்களே! சுகத்தை இழந்தோம்; பிராணனைப் பறிகொடுத்தோம். இனி எப்படிப் பிழைப்போம்?", என்று அலறுகிற ராக்ஷஸர்களின் கூச்சல்கள் கோரமாயும் பயங்கரமாயும் கிளம்பின. நெருப்பு ஜ்வாலைகளால் சூழப்பட்டு வீரச்சிரேஷ்டர்கள், இறந்து, ஸைன்யங்கள் மூலைக்குமூலை ஓடி, ஹனுமானுடைய கோஷத்தாலும், பலத்தாலும் நாசஞ்செய்யப் பட்ட லங்கை, சாபத்தால் அழிந்ததுபோல் காணப்பட்டது; பகவானுடைய ஆக்ஞையால் அழிந்த பூமியைப்போல், ஜ்வாலை களோடு கூடின அக்னியால் லங்கை வெந்து அதிலுள்ள ராக்ஷஸர் கள் துக்கத்தால் பரபரப்புடன் அங்குமிங்கும் ஓடுவதை ஆஞ்ஜ நேயர் கண்டார்.

நானு விருக்ஷங்களால் நிறைந்த அசோகவனத்தை அழித்துப் பெயர் பெற்ற ராக்ஷஸர்களை யுத்தத்தில் கொன்று, அழகான வீடு களையே ரத்தினமாலையாகத் தரித்த லங்கையைக் கொளுத்தி, தான் வந்த காரியத்தை நிறைவேற்றி, திரிகூட பர்வதத்தின் சிகரத்தில் எரிகின்ற வாலுடன் உட்கார்ந்திருக்கையில், மாருதி கிரணங்களால் விளங்கும் சூரியனைப்போல் தோன்றினர். கணக்கற்ற ராக்ஷஸர்களைக் கொன்று, மரங்களடர்ந்த அசோகவனத்தை அழித்து, ராக்ஷஸர்களுடைய வீடுகளில் நெருப்புவைத்துத் தான் வந்த காரியம் நிறைவேறிற்றென்று மனதால் ஸ்ரீராமனை ஸ்மரித்து; "ஸ்வாமி! நான் தங்களுடைய ஸன்னிதியை விட்டு வந்தது

முதல் நடந்த விஷயங்களை ஸந்நிதியில் வந்து விக்ஞாபனம் செய்ய முடியவில்லை. ஆனாலும் மனதால் விக்ஞாபனம் செய்கிறேன். அங்கிகரிக்க வேண்டும்'' என்று பிரார்த்தித்தார். அப்பொழுது மஹா பலவானும் வேகத்தில் வாயுவைப்போன்ற வரும், வாயுபுத்திரனும், மஹாபுத்திமானும், வானரச் சிரேஷ்டரு மான மாருதியை ஸகல தேவகணங்களும் கொண்டாடினார்கள். அவரும் அசோகவனத்தை அழித்து, ராக்ஷஸர்களை யுத்தத்தில் கொன்று லங்கையைக் கொளுத்தி மஹா தேஜஸுடன் விளங்கினார். அப்பொழுது தேவ கந்தர்வ ஸித்த கணங்களும் மஹரிஷிகளும் "என்ன தைரியம்! என்ன பராக்கிரமம்! நாம் இதுவரையில் கண்ணெடுத்துப் பார்க்கத் துணியாத இந்த லங்கையை இவன் ஒண்டியாய்ச் சாம்பலாக்கிவிட்டானே,'' என்று அடங்காத ஆச்சரியமடைந்தார்கள். பிறரால் செய்ய முடியாத காரியங்களைச் செய்த மாருதி, திரிகூட சிகரத்தில் ஜ்வலிப்பதைக் கண்டு, ஸகலப் பிராணிகளும் "இது குரங்கல்ல, ஸாக்ஷாத் பிரளயகாலாக்னி" என்று நினைத்துப் பயந்தன. தேவ, கந்தர்வ, வித்தியாதர, நாக, யக்ஷ கணங்களும் முனிச்சிரேஷ்டர்களும் ஸகல பூதங்களும் ஆஞ்ஜ நேயருடைய அற்புதமான செய்கையால் அளவற்ற ஸந்தோ மடைந்தார்கள்.

தேவாஸ்ச ஸர்வே முனிபுங்காவாஸ்ச
    கந்தர்வ வித்யாதர நாகயக்ஷா: |
பூதானி ஸர்வாணி மஹாந்தி தத்ர
    ஜக்மு: பராம் ப்ரீதி மதுல்யரூபாம் ‖ (52)



சனி தசை

# கேது புக்தி

ஸ்ரீ ராமசந்த்ராய நம :

## கிஷ்கிந்தா காண்டம் — 6-வது ஸர்க்கம்

# ராமன் ஸீதையின் ஆபரணங்களைக் கண்டது

புனரேவாப்ரவீத் ப்ரீதோ ராகவம் ரகுநந்தனம்
அயமாக்யாதி மே ராம ஸசிவோ மந்த்ரிஸத்தம : (1)

ஸுக்ரீவன் மறுபடியும் ராமனைப் பார்த்து, ஸ்வாமி, என் மந்திரியான ஹனுமான் தாங்கள் இந்த வனத்திற்கு வந்த காரணத்தைத்தெரிவித்தான். "தாங்களும் லக்ஷ்மணனும் காட்டில் தங்கியிருக்கையில் ஒரு ராக்ஷஸன் தங்கள் பார்யையை எடுத்துப் போனான். நீங்கள் இல்லாத ஸமயத்தில் ஜடாயு தடுக்க, அவரையும் வழியில் கொன்றான். பார்யையை விட்டுப் பிரிந்த துக்கத்தைத் தாங்கள் வெகுகாலம் அனுபவிக்கும்படி விட மாட்டேன். மதுகைடபர்களால் எடுத்துப் பாதாளத்தில் கொண்டுபோய் வைக்கப்பட்ட வேதத்தைப் பகவான் மத்ஸ்யாவதாரமெடுத்து திருப்பிக்கொண்டுவந்ததுபோல் ராவணன் ஸீதையைப் பாதாளத்தில் வைத்திருந்தாலும் ஸ்வர்க்காதிலோகங்களில் ஒளித்திருந்தாலும் இன்னும் எங்கே வைத்திருந்தாலும் எப்படியாவது கொண்டுவந்து தங்களிடத்தில் ஒப்புவிக்கிறேன். நான் சொல்வதை ஸத்தியமென்று அங்கீகரிக்க வேண்டும். விஷங்கலந்த பக்ஷணத்தை ஒருவன் தின்று ஜரிக்கமுடியாததுபோல ஸீதையை எடுத்துப் போய் வைத்திருப்பதற்கு இந்திராதி தேவதைகளுக்கும் அஸுரர்களுக்கும் முடியாது ; துக்கப்படவேண்டாம். தங்களுடைய

பார்யையைக் கொண்டுவருவேனென்பதில் சந்தேகமில்லை. அந்தக் கொடிய ராக்ஷஸன் அவளை ஆகாச மார்க்கமாக எடுத்துப் போகையில், 'ஹா ராமா, ஹா லக்ஷ்மணா' என்று தீனமாகக் கதறிக்கொண்டு, நாகேந்திரனுடைய பார்யையைப்போல் ராவணனுடைய மடியில் விளங்கின ஒரு பெண்ணைப் பார்த்தேன். பல அடையாளங்களால் அவள் ஸீதையாக இருக்கவேண்டுமென்று நிச்சயிக்கிறேன். நானும் இந்த நான்கு வானரர்களும் மலையில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து, அவள் தன் உத்தரீயத்தில் ஆபரணங்களை முடித்து கீழே எறிந்தாள். அவைகளை ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வைத்திருக்கிறேன். தாங்கள் அவைகளைப் பார்த்து, ஜானகியின் ஆபரணங்களாவென்று சொல்ல வேண்டும்'' என்றான்.

அதைக் கேட்டு ராகவன், "தோழனே! ஏன் தாமதிக்கிறாய்? இப்பொழுதே அவைகளைக் கொண்டுவா" என்று கட்டளையிட்டார். உடனே ஸுக்ரீவன் அந்தக் குகையில் புகுந்து ஆபரணங்களை எடுத்துவந்து ராமனுக்குக் காட்டினான். ராமன் அவைகளை வாங்கி, சந்திரனைப் பனி மூடுவதுபோல் கண்கள் நீரால் மறைய, ஸீதையின் ஞாபகத்தால் சோகம் மேலிட்டு, "ஹா, பிரிய நாயகி" என்று அலறித் தைரியமிழந்து பூமியில் விழுந்தார். அவைகளை அடிக்கடி மார்போடணைத்து, மஹாஸர்ப்பம் புற்றிலிருந்து கோபத்தால் சீறுவதுபோல் பெருமூச்சு விட்டார். கண்ணீர் தாரைதாரையாகப் பெருக, பக்கத்தில் நின்ற லக்ஷ்மணனைப் பார்த்துத் தீனமாகப் பிரலாபித்தார். "குழந்தாய், ஸீதையை ராவணன் எடுத்துப் போகும்பொழுது, அவள் விட்டெறிந்த ஆபரணங்களைப் பார்த்தாயா? இவை பசும்புல் தரையில் விழுந்ததால் சேதமில்லாமலிருக்கின்றன. இவை ஸீதையின் ஆபரணங்களா? பார்த்துச் சொல். கண்ணீர் வெள்ளத்தால் என் கண்கள் மறைந்து பார்க்க முடியவில்லை'' என்றார்.

அப்பொழுது லக்ஷ்மணன், "அண்ணா, இந்த வங்கிகளை அறியேன்; குண்டலங்களையும் அறியேன். இந்தப் பாதச் சிலம்புகளும் கொலுஸுகளும் ஸீதை தரித்திருந்தவையென்று எனக்கு நன்றாகத் தெரியும். ஒவ்வொரு நாளும் நான் பாதங்களில் பணியும்பொழுது அவைகளைப் பார்த்திருக்கிறேன்" என்றார்.

பிறகு ராமன் ஸுக்ரீவனைப் பார்த்து, "ராவணன் ஸீதையை எடுத்துக்கொண்டு எந்தத் திக்கில் போனான்? எனக்கு இவ்வளவு

துக்கத்தைக் கொடுத்த அந்தத் துஷ்ட ராக்ஷஸன் எங்கேயிருக் கிறுன் ? அவனுக்காக நான் அந்த வம்சத்தையே வேரறுக்க போகிறேன். என் பிரிய நாயகியான ஸீதையை எடுத்துப் போய் எனக்குக் கோபத்தை உண்டாக்கி, யமலோகத்திற்குப் போகு வழியைத் தானே திறந்துகொண்டானல்லவா ? என் பிராணனை காட்டிலும் பிரியமான ஸீதையை நான் இல்லாத வேளையி திருட்டுத்தனமாக எடுத்துப் போன என் சத்துரு இன்னுனென் சொல். இப்பொழுதே அவனை யமலோகத்திற்கு அனுப்புகிறேன்" என்ருர்.

மம தயிததரா ஹ்ருதா வனுந்தாத்
ரஜனிசரேண விமத்ய யேன ஸா |
கதய மம ரிபும் த்வமத்ய வை
ப்லவகபதே யமஸாதனம் நயாமி ॥ (27



சனி தசை

# சுக்கிர புக்தி

ஸ்ரீ ராமசந்த்ராய நம :

ஸுந்தர காண்டம் — 38-வது ஸர்க்கம்

## காகாஸுர விருத்தாந்தம்

ததஸ்ஸ கபிசார்தூல : தேந வாக்யேன ஹர்ஷித :
ஸீதாமுவாச தச்ச்ருத்வா வாக்யம் வாக்யவிசாரத : (1)

மஹாபுத்திமானுன அந்த வானரச் சிரேஷ்டன் ஸீதையின் வார்த்தையைக் கேட்டு மிகுந்த ஸந்தோஷமடைந்து, "அம்மா தாங்கள் சொன்ன வார்த்தைகள் ஸ்த்ரீகளின் ஸ்வபாவத்திற்கும் பதிவிரதைகளுடைய விநயத்திற்கும் தகுந்தவையே. நூறு யோஜனை விஸ்தீர்ணமுள்ள இந்தப் பெருங்கடலை என் முதுகிலேறித் தாண்டுவது ஸ்த்ரீயான தங்களுக்கு முடியாதல்லவா? ராமனைத் தவிர வேறு புருஷனைத் தொடமாட்டேனென்ற இரண்டாவது காரணம் அந்த மஹாத்மாவின் பத்தினியாகிய தங்களுக்கே தகும். இப்படிப்பட்ட வார்த்தையை வேறொருவரும் சொல்ல மாட்டார்கள். தங்களுடைய ஸகல விருத்தாந்தங்களையும் வார்த்தைகளையும் ஒன்றுவிடாமல் ராகவனிடத்தில் சொல்வேன். அவருக்குப் பிரியமான காரியத்தைச் செய்யவேண்டுமென்ற இச்சையாலும் வேறு அநேக காரணங்களாலும் தங்களிடத்திலுள்ள ஸ்நேஹத்தாலும் களங்கமில்லாத மனதுடன் இப்படிச் சொன்னேனேயொழிய வேறல்ல. இந்தப் பெருங் கடலைத் தாண்டுவது கஷ்டம்; கோர ராக்ஷஸர்களால் இரவும் பகலும் காக்கப்பட்ட இந்த லங்கையில் பிரவேசிப்பது அதிலும் கஷ்டம்; நான் சொன்னபடி செய்ய எனக்குச் சக்தியுண்டு; மற்றவர்களுக்குச் சுலபமல்ல. ஆகையால் இப்படிச் சொன்னேன், ராகவனிடத்தில்

எனக்குள்ள ஸ்நேஹத்தாலும், தங்களிடத்தில் வைத்த பக்தியாலும், இப்போதே தங்களை ராமனோடு சேர்த்து வைக்கவேண்டுமென்று அளவற்ற ஆசை கொண்டிருக்கிறேன். இல்லாவிட்டால் இப்படிச் சொல்வேனா ? என்னுடன் ராமனிருக்குமிடத்திற்கு வருவதற்குத் தாங்கள் இஷ்டப்படாவிட்டால் நான் தங்களைப் பார்த்தேனென்று அவர் நம்பும்படி சில அடையாளங்களைக் கொடுங்கள்" என்று பிரார்த்தித்தார்.

அதைக் கேட்டு ஸீதை தனக்கும் ராகவனுக்கும் ஏகாந்தத்தில் நடந்த விருத்தாந்தங்களைச் சொல்ல ஆரம்பிக்கையில், தான் முன்பு அனுபவித்த ஸுகங்களையும் இப்பொழுது படும் கஷ்டத்தையும் நினைத்துக் கண்ணீர் நெஞ்சடைக்க மெதுவாய், "ஆஞ்ஜநேய! சித்திரகூடப் பர்வதத்தினடியில் வடகிழக்கு மூலையில் மந்தாகினி நதிக்கு ஸமீபத்தில் ஒரு புண்ணிய ஸ்தலமுண்டு. அங்கே ஸித்தர்களும், தபஸ்விகளும் ஆனந்தமாய் வஸிப்பார்கள். பழம், கிழங்கு ஜலம் குறைவில்லாமல் கிடைக்கும்; நாங்கள் அங்கேயிருக்கையில் நடந்த ஒரு விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன். இந்த அடையாளத்தை என் பர்த்தாவிடத்தில் சொல். 'ஒரு ஸமயத்தில் பலவித புஷ்பங்களால் வாஸனையுள்ள மரச்சோலைகளில் நான் வெகுநேரம் விளையாடி வியர்த்துக் களைத்துத் தங்களுடைய மடியில் உட்கார்ந்தேன். அப்பொழுது ஒரு காக்கை மாமிசத்தில் ஆசை கொண்டு என் ஸ்தனத்தில் கொத்திற்று. நான் அதன்மேல் ஒரு சிறிய கல்லை எடுத்தெறிந்து துரத்தினேன். மாமிசத்தில் ஆசை வைத்த அந்தத் துஷ்டக் காக்கை நான் எவ்வளவு துரத்தியும் மறுபடியும் என்னை அடிக்கடி ஹிம்ஸித்ததேயல்லாமல், அவ்விடத்தை விட்டுப் போகவேயில்லை. அந்த ஹிம்ஸையைத் தீர்க்கவேண்டுமென்று பரபரப்புடன் எழுந்தேன். என் உத்தரீயம் நழுவ, அதை ஒட்டியாணத்தால் சேர்த்துப் பிடித்துக்கொண்டு அந்த காக்கையிடத்தில் மிகுந்த கோபத்துடன் நின்றேன். அப்பொழுது என்னைப் பார்த்தீர்கள். பிறகு நான் அந்தக் காக்கையை எவ்வளவு அடித்துத் துரத்தியும் அது என்னைக் கொத்திக்கொண்டேயிருந்தது. அதைக் கண்டு ஒரு காக்கையை ஓட்ட எனக்குச் சக்தியில்லாததைப் பற்றித் தாங்கள் பரிகாசம் செய்தீர்கள். அப்பொழுது எனக்குண்டான வெட்கமும் அந்தக் காக்கையிடத்திலுள்ள கோபமும் சொல்லி முடியாது. அதைக் கண்டு தாங்கள் என்னை ஸமாதானம் செய்தீர்கள். நான் மிகவும் களைத்துத் தங்க

ருடைய மடியில் மறுபடியும் வந்து படுத்தேன். ஒரு காக்கை நம்மை இவ்வளவு பாடுபடுத்திற்றல்லவா வென்று நினைக்க எனக்குத் துக்கம் தாங்காமல் கண்ணீரால் முகம் நனைந்து பிறகு மெள்ள மெள்ளத் துடைத்துக் கொண்டேன். அப்பொழுது தாங்கள் என்னைப் பார்க்கவில்லையோ ?' "பிறகு களைப்பால் நான் வெகு நேரம் அவருடைய மடியில் படுத்துத் தூங்கினேன். அவரும் களைத்து என் மடியில் படுத்துத் தூங்கிவிட்டார். அப்பொழுது அந்தக் காக்கை என் ஸமீபத்தில் வந்து நான் விழித்துக்கொண்டு ராகவனுடைய மடியிலிருந்து எழுந்தவுடன் சீக்கிரமாய் என்மேல் பாய்ந்து ஸ்தனங்களுக்கு நடுவில் கொத்திற்று. அடிக்கடி கிளம்பிக் கிளம்பி என்னைக் கொத்திக் கிழிக்கையில் ரத்தத்துளிகள் ரகுநாதன் மேல் விழ, அவர் விழித்துக்கொண்டார். சுகமாய்த் தூங்கிக் கொண்டிருக்கையில் சத்துருக்களை நாசம் செய்யும் சக்தியுள்ளவர்; அந்த காக்கையின் ஹிம்ஸையைப் பொறுக்க முடியாமல் நான் அவரை எழுப்பினேன்.

"அந்த மஹாவீரன் நான் படும் அவஸ்தையையும் அந்தக் காக்கை என் ஸ்தனங்களுக்கு நடுவில் செய்த காயத்தையும் பார்த்துக் கோபங்கொண்டு காலஸர்ப்பத்தைப்போல் பெருமூச்சு விட்டு, 'ஸுந்தரீ! இப்படி உன்னை மார்பில் கொத்தி காயப் படுத்தினவன் யார்? ஐந்து தலை நாகம் கோபத்தால் சீறிக்கொண் டிருக்கும்பொழுது அதனுடன் விளையாட விரும்பும் மூர்க்கன் யார்?' என்று நான்கு புறத்திலும் பார்க்கையில் அந்தக் காக்கை குரூரமான நகங்களுடன் என் ரத்தத்தால் பூசப்பட்டு எனக்கெதிரே உட்கார்ந்திருப்பதைக் கண்டார். அது இந்திரனுடைய புத்திரனான ஜயந்தன்; ராகவன் கோபத்துடன் தன்னைப் பார்த்த பொழுது, 'ஓஹோ! மோசம் வந்ததே' என்று வாயுவேகமாய்ப் பூமிக்குள் மறைந்தான். அதைக் கண்டு மஹாபுத்திமானான ரகுவீரன் அந்தக் காக்கையின் நிஜஸ்வரூபத்தையும் எண்ணத்தையும் அறிந்து, கோபத்தால் கண்கள் ஜ்வலிக்க, அதை குரூரமாய்ச் சிக்ஷிக்க வேண்டு மென்று நினைத்தார். ஆனால், அங்கே அவருடைய கோதண்டமும் பாணங்களுமில்லை. உடனே தான் உட்கார்ந்திருந்த ஆஸனத்தி லிருந்து ஒரு தர்ப்பத்தைக் கிள்ளி அதில் பிரம்மாஸ்திரத்தின் மந்திரத்தை ஜபித்து அந்தக் காக்கையை உத்தேசித்துப் பிரயோ கித்தார். உடனே அது காலாக்னிபோல் ஜ்வலித்துக்கொண்டு அந்தக் காக்கையை ஆகாசமார்க்கமாய்த் துரத்த ஆரம்பித்தது.

"அதைக் கண்டு அந்தக் காக்கை ஓடிற்று, தாவிற்று, பறந்தது, மறைந்தது; தனக்குத் தெரிந்த ஸகல தந்திரங்களையும் உபாயங்களையும் செய்தது. ஒன்றும் பலிக்காததைக் கண்டு, என்னைக் காப்பாற்றுவாருண்டோவென்று வாய்விட்டலறிக்கொண்டு இந்த லோகமெங்கும் அலைந்து திரிந்தது. என்ன கஷ்டம்! பிறகு தன் பிதாவான தேவேந்திரனிடத்தில் சென்றால் தன்னைக் காப்பாற்றுவாரென்று அங்கே ஓடிற்று. தேவேந்திரன் அவனுடைய அஸுர ரூபத்தையும், துக்கத்தையும் கண்டு, நடந்த விருத்தாந்தத்தை விசாரித்து அவனைத் துரத்திவரும் பிரம்மாஸ்திரத்தையும் பார்த்தான். 'ராமன் ஒருவனைக் கொல்லவேண்டுமென்று நிச்சயித்த பிறகு நாம் அதில் தலையிட்டுக்கொண்டால் பிழைப்பதேது? மேலும் இவன் செய்த துஷ்டக் காரியத்திற்கு இந்தத் தண்டனை தகுந்ததே. மேலும் நான் ராஜ்யத்தையும் தேஜஸையும் பார்யையும் கீர்த்தியையும் இழந்து ஓடி ஒளிந்துத் தப்பிக்கும் பொழுது எனக்கு ஸகலத்தையும் கொடுத்து ரக்ஷித்த லோகமாதாவிற்கு அபகாரம் செய்தவனை நான் திரும்பிப் பார்க்கலாமோ? ஸகல லோகங்களுக்கும் பிதாவான ஹரியே அவனைக் கைவிட்டபின் எனக்கென்ன? அவர் என்னுடன் பிறந்தவரன்றோ? அவருக்கு அபராதம் செய்தாலென்ன? என்னையும் தேவர்களையும் கதறவடிக்கும் ராவணனை வதம் செய்யப் பகவான் அவதரித்திருக்க, இவன் அந்தக் காரியத்திற்கு விரோதம் செய்து எங்களுடைய க்ஷேமத்தைக் கெடுக்கவந்த துஷ்டன்; ஆகையால் ஒரு குலத்திற்கு நாசம் வராதபடி அதில் ஒருவனைத் தள்ளிவிடுவது நியாயம்' என்று புத்திபூர்வமாய் ஜயந்தனை அங்கிருந்து துரத்திவிட்டான். பிறகு தன்னைப் பெற்றெடுத்த தாய் தன்னிடத்தில் இரங்காமலிருப்பாளோவென்று ஜயந்தன் இந்திராணியிடத்தில் சென்று அடைக்கலம் வேண்டினன். 'ஸகல பிராணிகளுக்கும் மங்களத்தைச் செய்யவேண்டி சொல்லமுடியாத கஷ்டங்களை ஸஹித்துக் கொண்டிருக்கும் ஜானகிக்குத் தீராத அபராதம் செய்த இவன் நமக்குப் புத்திரனல்ல' என்று அவளும் துரத்திவிட்டாள். பிறகு தன்னைப் போன்ற தேவதைகளிடத்தில் சென்று அடைக்கலம் புகுந்தான். 'எவருடைய கிருபையால் நாம் ஸமுத்திர மதன காலத்தில் அமிருதத்தைப் பெற்றுச் சிரஞ்சீவிகளாய் வாழ்கிறோமோ, எவருடைய பராக்கிரமத்தால் அஸுரர்களை ஜயித்து ஸ்வர்க்கலோக ராஜ்யத்தை ஆளுகிறோமோ, அந்த குலதெய்வ

மான ராமனுடைய கண் சிவந்தால் நாம் எங்கே?' என்று அவர் களும் துரத்திவிட்டார்கள். பிறகு ஜயந்தன் தன்னைப்போன்ற பக்ஷிகளிடத்தில் போய்ச் சரணமடைந்தான்; 'நமக்கு பிரபுவான கருடன் யாருக்கு வாஹனமோ அந்த மஹாபிரபுவைக் கோப மூட்டினவன் நம்மிடத்திற்கு ஏன் வந்தான்?' என்று அவைகள் அடித்துத் துரத்திவிட்டன. பிறகு, மஹரிஷிகளிடத்தில் சென்று தன்னைக் காப்பாற்ற வேண்டுமென்று பிரார்த்தித்தான். அவர்கள் மூன்று காலங்களையும் அறிந்தவர்களாகையால், 'நாம் இவனுக்கு இடங்கொடுத்தால் நமக்கும் ஆபத்து நேரும். ராமனே இவனைக் காப்பாற்றுவார். பக்ஷிகளுக்குள் காக்கை சண்டாளன்; நாம் இவனைப் பார்ப்பது பிசகு; ஸகல ஜீவகோடிகளுக்கும் புருஷ காரமாய் நின்று உத்தம கதியை அடைவிக்கும் லோகரக்ஷகிக்கு அபராதம் செய்த இவனுக்குக் கதியுண்டோ?' என்று கைவிட்டார்கள். இப்படி பூலோகம், புவர்லோகம், ஸ்வர்க்க மென்ற மூன்று லோகங்களிலும் சுற்றியலைந்தான்; பூமியில் மஹரிஷிகளும், புவர்லோகத்தில் பக்ஷிகளும், ஸ்வர்க்கத்தில் தேவர் களும், மாதா பிதாக்களும் கைவிட்டார்கள். இன்னும் ஆசை விடாமல் கண்டபேர்களைக் கேட்டுக் கண்டவிடங்களில் வெட்க மில்லாமல் நுழைந்து அடித்துத் துரத்தப்பட்டான்.

"ஆகையால், முடிவில் ஸர்வலோக சரண்யனுன ரகுவீரனையே சரணமடைந்தான். மஹாலக்ஷ்மியே ஒருவன் மேல் குற்றம் சொன்னாலும், 'என் அடியார் குற்றம் செய்யார் அப்படிச் செய்தாலும் அது குற்றமாயிராது' என்று பக்தர்களைக் காப் பாற்றும் கருணாமூர்த்தியைச் சரணமடைந்தான். பூர்வத்தில் இந்திரனுக்கு ஸஹாயமாய் அஸுரர்களை ஜயித்த ககுத்ஸ்தருடைய வம்சத்தில் பிறந்த ராமன், இந்திரனுடைய புத்திரனிடத்தில் இரக்கம் வைத்தார். அவன் செய்த அபராதத்திற்கு அவனைக் கொல்ல வேண்டியது. ஆனாலும் அது வரையில் வெகு கஷ்டங்களை அனுபவித்திருக்கிறான். இப்பொழுது வேறு கதியற்று நம்மைச் சரணமடைந்திருக்கிறான். இவனை ரக்ஷிப்பது நமது விரதமல்லவா வென்று அவனிடத்தில் கிருபை செய்தார். ஸகல ஜீவகோடி களுக்கும் அதைத் தவிர வேறு சரணமுண்டோ? ஸகல லோகங் களிலும் அலைந்து திரிந்து யாதொரு பிரயோஜனமுமில்லாமல் தன்னையே சரணமடைந்த அந்தக் காக்கையின் துக்கத்தையும் பரிதாபத்தையும் அவன் தன்னையே கதியென்று வந்தடைந்த

தையும் கண்டு, 'இந்த பிரம்மாஸ்திரம் வீண்போகாதே ; ஆகையால் தங்களுடைய அஸ்திரத்திற்கு என் வலது கண்ணைப் பலியாகக் கொடுக்கிறேனென்று சொல்' என்றார். ஜயந்தனும் அப்படியே செய்ய அவனுடைய வலது கண்ணைப் பிடுங்கினர்; இப்படித் தனது வலது கண்ணைக் கொடுத்து ராமனுடைய கடாக்ஷத்தால் உயிர் பிழைத்தான். பிறகு, அவன் ரக்ஷகனான ரகுநாதனையும் அந்த மஹானுபாவரைப் பெற்ற தசரத சக்ரவர்த்தியையும் நமஸ்கரித்து ராமசந்திரனிடத்தில் உத்திரவு பெற்று ஸ்வர்க்கலோகம் சென்றான்.

"லோகநாதா ! எனக்காக ஒரு காக்கையின்மேல் பிரம்மாஸ்திரத்தை பிரயோகிக்கவில்லையா ? இப்பொழுது என்னைத் தங்களிடத்திலிருந்து அபஹரித்துத் தங்களை அவமானம் செய்து என்னை இப்படி உபத்திரவிக்கும் ஒரு அற்ப ராக்ஷஸனைப் பொறுத்திருப்பதற்கு காரணமேதோ ? அளவற்ற உத்ஸாஹத்தையுடைய தாங்கள் என்னிடத்தில் தயவு செய்யக்கூடாதா ? பிறர் துக்கப்படுவதைக் கண்டு ஸஹிக்கமாட்டேனென்ற தாங்கள் அந்த வார்த்தையை நடத்தையில் காட்டித் தங்களைச் சேர்ந்த நான் படும் துக்கத்தைத் தீர்க்கக்கூடாதா ? இப்படிச் செய்யாவிட்டால் புருஷோத்தமனென்ற பெயர் தங்களுக்கு எப்படித் தகும் ? அதைக் காப்பாற்றிக்கொள்ளுங்கள். நான் தங்களை நாதனாய் அடைந்தும் அனாதையைப்போலிருக்கிறேன். ஓடத்தில் ஏறினபிறகு கூவி கேட்பதுபோல் தாங்களும் நானும் ஏகாந்தமாயிருக்கையில், 'தங்களுக்கு மிகவும் பிரியமான தர்மமெது ?' என்று நான் கேட்டிருக்கிறேன். 'பிறர் துக்கப்படுவதைப் பார்த்தால் ஸஹிக்காமலிருப்பதே உத்தமமான தர்மம் ; அதே எனக்குப் பிரியம். அதே என் ஸ்வபாவம்' என்று தாங்களே சொல்லக் கேட்டேன். வேறு தூதன் முதலியவர்கள் சொன்னதில்லை. இது வார்த்தையே யொழிய அனுஷ்டானத்திற்கு வரவில்லையென்று, ஆஞ்ஜனேயா ! என் பிரபுவைக் கேள்.

'தாங்கள் அளவற்ற வீர்யம் உத்ஸாஹம் பலம் முதலிய அனந்த கல்யாண குண பரிபூரணரென்றும், கம்பீரத்தன்மையில் ஸமுத்திரத்தைப்போன்றவரென்றும், பிறரால் அசைக்க முடியாதவரென்றும், இந்திரன் எப்படி ஸ்வர்க்கத்திற்கு அதிபதியோ அப்படி இந்தக் கடல் சூழ்ந்த பூமிக்கு நாதனென்றும் அறிவேன்

என்று அவரிடத்தில் சொல்ல வேண்டும். ஆஞ்ஜநேயா! ரகு வீரன் சொன்ன வார்த்தையைத் தவறுகிறதுண்டோ? அஸ்திர வித்தையில் அவருக்கு நிகருண்டோ? அவருடைய பலத்திற்கு எல்லையுண்டோ? இப்படியிருந்தும் வீண்போகாத சஸ்திரங்களை ராக்ஷஸர்களிடத்தில் ஏன் பிரயோகிக்கக்கூடாது? யுத்தகளத்தில் நாகர்களாவது, கந்தர்வர்களாவது, அசுரர்களாவது, தேவர் களாவது ராமனுடைய பாணவேகத்தைத் தடுக்கமுடியுமா? அந்த வீரருக்கு என்னிடத்தில் நிஜமான பிரேமையும் என்னைச் சீக்கிரத்தில் மீட்கவேண்டுமென்ற இச்சையுமிருந்தால் கூர்மையான பாணங்களால் ராக்ஷஸர்களை ஏன் நாசம் செய்யவில்லை? அவ்வளவென்ன? லக்ஷ்மணன் பலவானல்லவா? வீரனல்லவா? சத்துருக்களுக்குக் காலனல்லவா? ராமனிடத்தில் உத்திரவு பெற்று என்னை ரக்ஷிக்கக்கூடாதா? வாயுவிற்கும் அக்னிக்கும் ஸமமான வேகத்தையும் தேஜஸையுமுடைய அவ்விருவர்களும் தேவர்களாலும் எதிர்க்கப்படுவார்களா? அவர்கள் சேர்ந்திருந்தால் என்னை ஏன் கவனிக்கவில்லை? சத்துருவர்க்கங்களை வேரறுத்து என்னை ரக்ஷிக்க அவர்களுக்குச் சக்தியில்லையோ? இதுவரையில் அப்படிச் செய்யவில்லையோ? இப்பொழுது நான் படும் அவஸ்தை களைப் பார்த்தால் தங்களுடைய பிராணனைக் கொடுத்தாவது என்னை ரக்ஷிப்பதற்கு நான் தகாதவளோ?

“ஆகையால், அவர்களிடத்திலாவது ஏதோ குற்றமிருக்க வேண்டும். அவர்கள் இப்படிச் செய்ய ஸமர்த்தர்களென்று எவரும் ஒப்புக்கொள்வார்கள். ஆகையால், என்னிடத்தில் பெரிய குற்றம் ஏதோ இருக்கிறது; சந்தேகமில்லை. நான் ஸர்வமும் தெரிந்தவளா? எனக்குத் தெரியாமல் நான் பாபத்தைச் செய்திருக் கலாம். அதை அனுபவிக்காமல் தீருமோ? காரணமிருக்கையில் காரியம் உண்டென்பதில் சந்தேகமோ? ஒரு வேளை அவர் என்னை வனத்திற்கு அழைத்துப் போகமாட்டேனென்று சொன்னபொழுது 'தாங்கள் புருஷ வேஷந்தரித்த ஸ்த்ரீயென்பதை அறியாமல் அநியாயமாய் என் தகப்பன் மோசம்போய் என்னைத் தங்களுக்கு விவாஹம் செய்து கொடுத்துவிட்டாரே” என்று சொல்லி மஹா அபசாரத்தைச் செய்திருக்கிறேனல்லவா? அந்தப் பாபம் போதாதா?' என்றாள்.

ஸீதை அப்படித் தீனமாய்க் கண்ணீர் பெருக பிரலாபித் ததைக் கேட்டு ஆஞ்ஜநேயர் மனங்கலங்கி, “தாயே! தங்களைப்

பிரிந்த துக்கத்தால் ராமன் இதர விஷயங்களில் ஆசையற்றுச் சோக ஸமுத்திரத்தில் மூழ்கியிருக்கிறார். லக்ஷ்மணன் பரிதபிக்கிறார். ஸத்தியத்தின் மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன். இவ்வளவு கஷ்டப்பட்டுத் தங்களைக் கண்டுபிடித்தேன். இனிமேலும் தாங்கள் கிலேசப்படவேண்டிய நியாயமென்ன? இந்த முகூர்த்தத்தில் தங்களுடைய துக்கங்களெல்லாம் நாசமடைந்தன. மஹா பலவானான அந்தப் புருஷச் சிரேஷ்டர்கள் தங்களைப் பார்க்க ஆவல்கொண்டு லங்கையைச் சாம்பலாய் அழிக்கப்போகிறார்கள். துஷ்டனான ராவணனையும் அவனுடைய பந்துக்களையும் யுத்தத்தில் மடித்துத் தங்களை அயோத்தியைக்கு அழைத்துப் போவார்கள். ஆகையால் ராகவனுக்கும், லக்ஷ்மணனுக்கும் தேஜஸ்வியான ஸுக்ரீவனுக்கும் வானரர்களுக்கும் நான் சொல்ல வேண்டிய ஸமாசாரமென்ன?'' என்றார்.

அதற்கு ஸீதை சோகத்தால் தழுதழுக்க, "மாருதே! லோகத்தில் ஸ்திரீகள் இகபர ஸாதகத்திற்காகவும் தங்களை ரக்ஷிப்பதற்காகவும் புத்திரர்களைப் பெறுகிறார்கள். என் மாமியான கௌஸல்யையோ அப்படிச் செய்யவில்லை. பெருந்தன்மையான ஸ்வபாவமுடையவளாகையால், ஸகல லோகங்களையும் ரக்ஷிக்கும் புத்திரன் பிறக்க வேண்டுமென்று விரதங்களை அனுஷ்டித்து லோகோபகாரத்திற்காக ரகுவீரனைப் பெற்றாள். அவளுடைய உத்தேசம் வீணாகுமோ? அவர் ரக்ஷிக்க வேண்டிய லோகத்தில் நானும் சேரவில்லையா? என்னை ரக்ஷிக்கவேண்டுமென்று நான் பிரார்த்திப்பதும் பிசகு. அந்தக் கவலை அவருக்கல்லவா? கால தாமதத்தை ஸஹிக்க முடியாமல் நான் சீக்கிரப்படுத்துவதேயொழிய வேறல்ல. அவருக்கு என்னை ரக்ஷிக்கச் சக்தியிருந்தால் போதும்; அப்பொழுது எனக்குக் குறைவென்ன? அவருக்கு எப்பொழுதும் பக்தர்களை ரக்ஷிக்கும் சக்தியும் கருணையும் குறையாமலிருக்க வேண்டுமென்று நாம் பிரார்த்திக்கவேண்டியது மாத்திரமே. ஆகையால் ரகுவீரன் க்ஷேமமாயிருக்கிறாராவென்று நான் விசாரித்ததாகச் சொல். அவரை நான் ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்தேனென்று சொல். ஏனென்றால், லோகத்தார்களைப்போல் அவரிடத்தில் நான் பிரார்த்திக்கவேண்டியது ஏதாவதிருந்தால் இந்த நமஸ்காரத்தைத் தவிர நான் செய்யவேண்டியது வேறென்ன?

மலைகள் ரத்தினங்கள் பூமியில் பிரியமான பார்வைகள் இன்னும் இந்த விசாலமான பூமியில் அடையமுடியாத ஸம்பத்துக்

களையும் விட்டு லக்ஷ்மணன் மாதாபிதாக்களிடத்தில் வணக்கமாய் உத்தரவு பெற்றுக்கொண்டு, தமையனிடத்தில் வைத்த ஸ்நேஹத்தாலும் பக்தியாலும் அவரைப் பின்தொடர்ந்து, அவருக்கு ஸகல கைங்கர்யங்களையும் செய்து அரண்யத்தில் ரக்ஷித்து வருகின்றானல்லவா? சிம்மத்தை போல் பலமுள்ள தோள்களையும் நீண்ட கைகளையுமுடையவன் ; பெருந்தன்மையான ஸ்வபாவத்தையுடையவன்; பார்க்கப் பிரியமானவன்; தன் தாயைப்போல் என்னையும், பிதாவைப்போல் ராமனையும் பாவித்து பணிவிடை செய்பவன் ; பெரியோர்களைப் பணிகிறவன் ; ராமனுக்கு ஸகலவித கைங்கரியத்தையும் செய்யும் பாக்கியம் பெற்றவன் ; ஸகல காரியங்களையும் செய்ய ஸமர்த்தன் ; அதிகமாய்ப் பேசாதவன் ; என் மாமனான தசரதருக்கு ஸமானன் ; அவருக்குப் பிரியமான புத்திரன் ; என் பிரீதிக்கு எப்பொழுதும் பாத்திரன் ; சிரேஷ்டன் ; ராமனுக்குத் தம்பி ; கட்டளையிட்ட காரியங்களை நிர்வஹித்துச் செய்யக் கூடியவன் ; ராமன் அவனுடைய முகத்தைப் பார்த்துத் தசரதர் காலஞ்சென்றதையும் நினைக்காதிருக்கிறார். எப்பொழுதும் பரிசுத்தன், ஸமர்த்தன், மிருதுவான ஸ்வபாவமுள்ளவன் ; ராகவனுக்குப் பிரியன்; அவனை என் விஷயத்தில் கவனிக்கவேண்டுமென்று நான் க்ஷேமம் விசாரித்ததாகச் சொல். என்னை ராவணன் அபஹரித்தானென்று அவனுக்குத் தெரியாது. இல்லாவிட்டால் இவ்வளவு காலம் நான் கஷ்டப்படவேண்டுமா ?

"ஆஞ்ஜநேயா ! ராகவன் என் துக்கத்தை நாசஞ்செய்யும்படி நீயே அவருக்குச் சொல்லவேண்டியது. வானரச் சிரேஷ்டா! இந்தக் காரியத்தை நீயே முடித்துவைக்க வேண்டியது. உன் ஸாமர்த்தியத்தால் ராகவன் என்னை மீட்க ஸகல பிரயத்தனங்களையும் செய்ய வேண்டியது. மஹாசூரனும் என் நாதனுமிருக்கும் ராமனிடத்தில் 'தாசரதே ! நான் ஒரு மாதத்திற்குமேல் பிழைத்திருக்கமாட்டேன். இது ஸத்தியம் பூர்வத்தில் இந்திரன் விருத்ராஸுரனென்ற பிராம்மணனைக் கொன்று, அந்த பிரம்மஹத்யையால் ஸ்வர்ககத்தையும் ராஜ்யலக்ஷ்மியையும் இழந்து, தரித்திரனாய்க் கஷ்டப்பட்டான். அப்பொழுது நாராயணன் மற்ற தேவதைகளுடன் அச்வமேதமென்ற வைஷ்ணவ யாகத்தைச் செய்து அவனுடைய பாபத்தைப் போக்கிப் பூர்வ ஸ்திதியில் வைத்தார். அப்படிப் பாபியான ராவணனால் வஞ்சிக்கப்பட்டு இங்கே சிறையில் வைக்கப்பட்டிருக்கும் என்னைத் தாங்களே ரக்ஷிக்கத் தகுந்தவர்க'ளென்று அடிக்கடி

சொல்ல வேண்டியது" என்று ஸமாசாரத்தைத் தெரிவித்துத் தன் வஸ்திரத்திலிருந்து மங்களகரமான சூடாமணியை எடுத்து ராகவனுக்கு அடையாளமாகக் காட்டும்படி ஆஞ்ஜநேயரிடத்தில் கொடுத்தாள். அவர் அதை வணக்கமாய்ப் பெற்றுக்கொண்டு விரலில் தரிக்கப் பார்த்தார். ஆனால், தான் விச்வரூபத்தை மாற்றி முன்பு எடுத்த சூக்ஷ்மரூபத்துடனிருந்தபடியால் அது அந்த ஆபரணத்திற்கு ஸரியாகவில்லை.

பிறகு, ஹனுமான் ஸீதையை நமஸ்கரித்து பிரதக்ஷிணம் செய்து வணக்கமாய்ப் பக்கத்தில் நின்றார். ஜானகியைக் கண்ட ஸந்தோஷத்தால் பூரித்து, தேகம் லங்கையிலிருந்தபோதிலும் மனதால் ராகவனுடைய திருவடிகளை அடைந்து நமஸ்கரித்தார். பெருங்காற்றால் கொஞ்சம் அசைந்த பிறகு, முன்போல் ஸ்திரமாயிருக்கும் மலையைப்போல், ஆஞ்ஜநேயர் ஸீதையைத் தேடியும் காணமல் பிராணனை விட நிச்சயித்துக் கலங்கி, அவளைக் கண்ட பிறகு ஆனந்தபரவசராய், அவளிடத்திலிருந்து சூடாமணியைப் பெற்றுக் கொண்டு ராமனுடைய ஸந்நிதிக்குத் திரும்பிப் போக யத்தனித்தார்.

மணிவர முபக்ருஹ்ய தம் மஹார்ஹம்
ஜனக ந்ருபாத்மஜயா த்ருதம் ப்ரபாவாத் |
கிரிரிவ பவனுவதூத முக்த :
ஸுகிதமனு : ப்ரதிஸங்க்ரமம் ப்ரபேதே || (73)



சனி தசை

# சூரிய புக்தி

ஸ்ரீ ராமசந்த்ராய நம :

## கிஷ்கிந்தா காண்டம் — 66-வது ஸர்க்கம்

## ஜாம்பவான் ஆஞ்ஜநேயரைப் புகழ்ந்தது

அனேக சதஸாஹஸ்ரீம் விஷண்ணாம் ஹரிவாஹினீம்
ஜாம்பவான் ஸமுதீக்ஷ்யைவம் ஹனுமந்த மதாப்ரவீத் (1)

எண்ணிறந்த வானரர்கள் வருந்துவதைப் பார்த்து ஜாம்பவான் ஆஞ்ஜநேயரை நோக்கி, "வானரர்களுக்குள் வீரசிகாமணியே! ஸகல சாஸ்திரங்களிலும் நிபுணனே! தனியே போய் உட்கார்ந்து கொண்டு மௌனமாயிருப்பதேன்? தேஜஸிலும் பலத்திலும் ஸுக்ரீவ மஹாராஜாவிற்கும் ராமலக்ஷ்மணர்களுக்கும் நீ ஈடல்லவா? கச்யபப்பிரஜாபதியின் புத்திரனான கருடன் எல்லாப் பக்ஷிகளிலும் மஹாபலவானென்றும் சிரேஷ்டனென்றும் பெயர் பெற்றவன். அவன் ஆஹாரத்திற்காக ஸமுத்திரத்திலிருந்து மஹா ஸர்ப்பங்களை அதிவேகமாகக் கொத்திக்கொண்டு போவதைப் பல தடவை பார்த்திருக்கிறேன். அவனுடைய இறக்கைகளின் பலமும் உன் புஜபலமும் ஸரி. பராக்கிரமத்திலும் வேகத்திலும் அவனுக்குக் குறைந்தவனல்ல. பலம், புத்தி, தேஜஸ் வலிமை முதலிய குணங்களில் சகல பூதங்களிலும் நீ மேலானவனென்று உனக்கேன் தெரியவில்லை? இந்த ஸமுத்திரத்தைத் தாண்டத் தகுந்தவன் நீயல்லவா?

"கேஸரியென்ற வானரச் சிரேஷ்டனுக்கு அஞ்ஜனையென்ற பத்தினியுண்டு. அப்ஸரஸுகளுக்குள் உத்தமமான புஞ்ஜிகஸ்தலையென்பவள் அவளே. மூன்று லோகங்களிலும் அவளைப்போன்ற

ரூபவதி கிடையாது. ரிஷி சாபத்தால் குஞ்சரனென்ற வான னுக்குப் புத்திரியாய்ப் பிறந்து தெய்வத்தன்மையால் நினைத்த ரூபத்தை எடுக்கக்கூடியவளாயிருக்கிறாள். ஒரு நாள் அவள் ஸகலப்பிராணிகளையும் மயக்கும்படியான மனுஷ்ய ரூபத்துடன் விசித்திர வஸ்திராபரணங்களால் அலங்கரிக்கப்பட்டுப் பர்வத சிகரத்தில் உலாவிக்கொண்டிருந்தாள். அப்பொழுது வாயுபகவான் அவள்மேல் ஆசைகொண்டு அவள் தரித்த வெண்பட்டை அபகரித்தான். மன்மதனுடைய தோரண ஸ்தம்பங்கள்போல் திரண்டுருண்ட துடைகளும் மலர்ந்த தாமரையைப் பழிக்கும் முகத் தையும், அழகிய ஸ்தனங்களையும், பருத்த பின் தட்டையும், சூக்ஷ் மான இடையையும் ஆழ்ந்த நாபியையும் மற்றையக் குற்றமற்ற அவயங்களையும் கண்டு, காமம் மீறி, வாயு இரு கைகளாலும் அவளை இறுகத் தழுவி, தன் தெய்வத்தன்மையால் அவளுடன் தேக ஸம்பந்தமில்லாமலேயே தன் தேஜஸை அவளுடைய கர்ப்பத்தில் பிரவேசிக்கச் செய்தார். அந்த மஹா பதிவிரதை பயந்து நடுங்கி 'பதிவிரதையான என்னை கெடுக்க விரும்பின துஷ்டன் யார்?' என்று கோபத்துடன் கேட்டாள். அதற்கு வாயுபகவான் 'பெண்ணே, பயப்படாதே. நான் உன்னைக் கெடுக்க விரும்பின னல்ல. உன்னை ஆலிங்கனம் செய்து மனதால் அனுபவித்தபடியால் உனக்குப் பிறக்கும் புத்திரன் வீரியத்திலும் புத்தியிலும் நிகரற்ற வனும், மஹா பலவானும், அபார தேஜஸ்வியாயும் ஒப்பில்லாத வலிமையுடையவனும், தாண்டுவதிலும் தடையில்லாமல் செல் வதிலும் எனக்கு ஸமமாயுமிருப்பான்' என்றார். தேவச்சிரேஷ்ட னுடைய அனுக்ரஹத்தைப் பெற்றதைப்பற்றி உன் தாய் பரமா னந்தமடைந்து, மந்தர பர்வதத்தின் குகையில் உன்னைப் பெற்றாள்.

"அப்பொழுது சூரியோதயமாயிற்று. நீ குழந்தையானதால் சிவந்த சூரியமண்டலத்தைப் பழமென்றெண்ணிப் பிடிக்க விரும்பி ஆகாசத்தில் தாவிச் சென்றாய். அநேகமாயிரம் யோஜனை தூரம் தாவிப் போயும் சளைக்காமல், சூரிய தேஜஸால் எரிக்கப்பட்டும் வருந்தாமலிருப்பதைப் பார்த்து, இந்திரன் பயந்து, வஜ்ராயுதத்தை உன்மேல் கோபத்துடன் எரிந்தான். உடனே நீ அங்கிருந்து விழுந்தாய். உன் கன்னம் ஒரு மலைச்சிகரத்திலடிப்பட்டு முறிந்தது. அதனால், உனக்கு ஹனுமானென்ற பெயர் கிடைத்தது. வாயு பகவான் தன் அருமைக் குழந்தையான உனக்கு நேர்ந்த

ஆபத்தைப் பார்த்து, ஸகல பிராணிகளிடத்திலும் கோபங்கொண்டு தன் போக்கை அடக்கி ஓரிடத்திலும் வராமலிருந்தான். அப்பொழுது ஸகல ஜீவன்களும் மூச்சுவிட முடியாமல் தவித்தார்கள். தேவதைகள் பயந்து வாயுவைப் பிரார்த்திக்க, அவர் கோபம் தணிந்து அவர்களிடத்தில் கிருபை வைத்து, முன்போல் லோகங்களில் ஸஞ்சரித்தார். அப்பொழுது உனக்கு ஆயுதங்களால் அழிவில்லையென்று பிரம்மா அனுக்கிரஹித்தார். இந்திரன், நீ வஜ்ஜிராயுதத்தால் அடிபட்டும் இறக்காததைக் கண்டு, மகிழ்ந்து, 'உனக்கிஷ்டமான பொழுது நீ மரணமடையக்கடவாய்' என்று வரங்கொடுத்தான்.

"ஆகையால் நீ கேஸரியென்ற வானரனுடைய க்ஷேத்திரத்தில் வாயுபகவானுக்குப் பிறந்த புத்திரன். தேஜஸிலும் பராக்கிரமத்திலும் தாண்டுவதிலும் அவரைப் போன்றவன். நாங்கள் இப்பொழுது உயிரில் ஆசையை விட்டிருக்கிறோம். நீ எங்களைக் காப்பாற்ற வேண்டும். திறமையிலும் பராக்கிரமத்திலும் நீ கருடனைப் போன்றவனல்லவா? பகவான் திரிவிக்கிரமாவதாரமெடுத்தபொழுது நான் இந்தப் பூமண்டலத்தை இருபத்தொரு தரம் சுற்றி வந்தேன். பாற்கடலைக் கடையும்பொது தேவதைகளின் உத்திரவால் அநேக லோகங்களிலிருந்து அபூர்வமான ஒஷதிகளைக் கொண்டு வந்தேன். அவைகளை ஸமுத்திரத்தில் போட்டதால் அமிருதமுண்டாயிற்று. அப்பொழுது என் பலம் எல்லையற்றது. இப்பொழுதோ நான் கிழவன். பலபராக்கிரமமற்றவன். நீ ஸகல உத்தம குணங்களால் அலங்கரிக்கப்பட்டவன். எங்களில் மேலானவன். ஆகையால் அளவற்ற உன் பல பராக்கிரமத்தை வெளிப்படுத்து. உன் அற்புதமான வீரியத்தைப் பார்க்க இந்த வானர ஸைன்யம் ஆவல் கொண்டிருக்கிறது. எழுந்திரு. இந்த மஹா ஸமுத்திரத்தை ஒரு நிமிஷத்தில் தாண்டி வா. வேகமாகத் தடையில்லாமல் ஸஞ்சரிக்கக்கூடியவன் ஸகல பிராணிகளிலும் உன்னைப்போலுண்டோ? வானரர்கள் ஏக்கம் பிடித்திருக்கிறார்கள். ஆஞ்ஜநேய! இந்த ஸமயத்திலும் அலக்ஷியம் செய்யலாமா? ஸகல லோகங்களையும் மூன்று அடிகளால் முன்பு மஹாவிஷ்ணு தாண்டினதுபோல், நீயும் இந்த மஹாஸமுத்திரத்தை ஓரடியால் தாண்டுவாய்" என்று ஜாம்பவான் மாருதியை ஸ்தோத்திரம் செய்தார்.

அதைக் கேட்டு ஹனுமாரும், "அப்படியே செய்கிறேன்" என்று ஒப்புக்கொண்டு அதற்குத் தகுந்த பெரிய ரூபத்தை எடுத்தார். வானர ஸைன்யங்கள் கவலை நீங்கி ஆனந்தத்தால் பரவச மானார்கள்.

ததஸ்து வை ஜாம்பவதா ப்ரசோதித :
ப்ரதீதவேக : பவனாத்மஜ : கபி : |
ப்ரஹர்ஷயம் ஸ்தாம் ஹரிவீரவாஹினீம்
சகார ரூபம் மஹதாத்மனஸ்ததா ॥ (40)



# சந்திர புக்தி

ஸ்ரீ ராமசந்த்ராய நம ;

## பால காண்டம் — 26-வது ஸர்க்கம்

## தாடகாவதம்

முனேர்வசன மக்லீபம் ச்ருத்வா நரவராத்மஜ:
ராகவ: ப்ராஞ்ஜலிர்ப்பூத்வா ப்ரத்யுவாச த்ருடவ்ரத: (1)

இப்படி ஆழ்ந்த அர்த்தங்களுடன் விசேஷ தைரியத்தைக் கொடுக்கும் வார்த்தைகளைக் கௌசிகர் சொல்ல, தாசரதி அவரைக் கைகூப்பி வணங்கி "குருநாதா! என்னைத் தங்களுடன் அனுப்பினபொழுது 'முனிச் சிரேஷ்டருடைய ஆக்ஞையைத் தடைசொல்லாமல் ஸந்தேகப்படாமல் உடனே கீழ்ப்படிய வேண்டும் என்று வஸிஷ்டர் முதலியவர்களுக்கு முன்பாக என் பிதா உத்தரவு செய்திருக்கிறார். அது எனக்கு பிரமாணம். மேலும், குசிக வம்சத்தில் பிறந்த பிரம்மக்ஞானியான தாங்கள் சொல்லும் வார்த்தையும் பாப ஸம்பந்தமுண்டோ? கேவலம் புண்ணியமாயும் ஸகல புருஷார்த்தங்களுக்கும் ஒத்துமிருக்கும். பசுக்களுக்கும் பிராம்மணர்களுக்கும் இந்தத் தேசங்களுக்கும் பரமக்ஷேமத்தை உண்டுபண்ண வேண்டி ஸ்த்ரீ வதம்செய்ய நிச்சயித்தேன்" என்று கோதண்டத்தை வளைத்து நாணோசை செய்தார். அது பத்துத் திக்குகளிலும் பரவி எதிரொலியுண்டாயிற்று. அவ்வனத்திலுள்ள ஜந்துக்களெல்லாம் நடுங்கின.

மஹா கோபமுடைய தாடகை அதுவரையில் கேட்காத அந்தச் சப்தத்தைக் கேட்டுக், கோபம் இன்னும் அதிகரித்து, இன்னது

செய்வதென்று அறியாமல், ஓசை கேட்ட இடத்தை நோக்கி ஓடி வந்தாள். ராகவன், "லக்ஷ்மணா! இவளுடைய சரீரமும் முகமும் எவ்வளவு விசாரமாயும் அளவுக்கு மிஞ்சியுமிருக்கின்றன! மாயா பலத்திற்கோ எல்லையில்லை. தைரியமில்லாதவர்கள் இவளைப் பார்த்தவுடன் ஹிருதயம் வெடித்து இறப்பார்கள். இவளை ஜயிப்பது எளிதல்ல. துஷ்டையானாலும் பெண்ணாகையால் இவளை கொல்ல மனம் வரவில்லை. காது மூக்குகளை அறுத்து, கைகால்களை வெட்டி, ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் சக்தியையும் பிறரை ஜயிக்கும் பலத்தையும் அழித்து, இங்கே வராமல் திருப்பி விடுகிறேன். இந்தத் தேசங்களுக்கு நேர்ந்த கஷ்டமும் நீங்கும்; குருவின் ஆக்ஞையும் நிறைவேறும்; ஸ்த்ரீயைத் கொன்ற தோஷமும் தொடராது. அந்தக் காரியம் சூரர்களுக்குத் தகாது" என்றார்.

அதற்குள் தாடகை மஹா கோபத்துடன் பேரிடிபோல் கர்ஜித்துக் கைகளை உயரத் தூக்கி ராமனுக்கு நேரில் ஓடி வந்தாள். கடுந் தவத்தால் பிரம்மரிஷியானகௌசிகருக்கு ராமனுடைய அபார சக்தியும் மஹிமையும் நன்றாகத் தெரியும். ஆனாலும், அவளுடைய பரபரப்பைப் பார்த்து 'ஹூம்' என்று அதட்டி, ராம லக்ஷ்மணர்களுக்கு க்ஷேமமும் ஜயமும் உண்டாகட்டுமென்று ஆசீர்வதித்தார். தாடகை அவர்கள்மேல் புழுதியை வாரியிறைத்து, மண்மாரி பெய்து, ஒரு முகூர்த்தம் வரையில் பிரமிக்கச் செய்தாள். பிறகு மாயாபலத்தால் ஆகாசத்திலிருந்து கற்களையும் பாறைகளையும் பொழிந்தாள். ராமனுக்குக் கோபமுண்டாயிற்று. சரமாரியால் கல்மாரியைத் தடுத்து, தன்னை நோக்கி ஓடிவரும் தாடகையின் கைகளை அறுத்துத் தள்ளினார். கர்ஜித்துக்கொண்டு சற்றுக் களைத்துக், கைகளற்று வெகு ஸமீபத்தில் வந்த அவளுடைய காது மூக்குகளை லக்ஷ்மணன் அறுத்தார். நினைத்த ரூபங்களை எடுக்கக் கூடியவளாகையால் அவள், பலவிதமாகத் தோன்றி, திடீரென்று மறைந்து, மாயையால் அவர்களை மயக்கி, கல்மாரி பொழிந்து கோரமாய் இரைந்துகொண்டு எங்கும் ஸஞ்சரித்தாள். எப்புறத்திலும் கல்மழை பெய்யக்கண்டு, கௌசிகர் இவளைக் கொல்லத் தகுந்த காரணம் இப்பொழுதே நேர்ந்ததென்று, "ராமா! இந்தப் பாபியிடத்தில் நீ இரக்கம் வைத்தது போதும். இவளோ பரம துஷ்டை; யாகங்களைக் கெடுக்கிறவள்; ஸந்தியா காலத்தில் ராக்ஷஸர்களை ஜயிக்க முடியாது. இவளுடைய பலம் மாயையால் வர வர

வளர்கிறது. ஸந்தியாகாலத்திற்கு முன் இவளைக் கொல்ல வேண்டும்" என்று எச்சரித்தார்.

கண்ணுக்குத் தெரியாமலிருந்துகொண்டு கல் மழை பெய்யும் அவளுடைய சப்தமுண்டான விடத்தைக் குறிவைத்து ராமன் அம்புகளை எய்து அவளைத் தடுத்தார், தன் மாயாபலம் வீணான தைக்கண்டு பயங்கரமாகக் கத்திக்கொண்டு, இடி விழுவதுபோல் ராஜகுமாரர்களை நோக்கி அவள் ஓடிவந்தாள். ஓர் திவ்வியாஸ்திரத் தால் ராமன் அவளை மார்பில் துளைக்க, அவள் கீழே விழுந்து உயிரை விட்டாள். பயங்கரமான தாடகை கொல்லப்பட்டவுடன் இந்தி ராதி தேவர்கள், 'நல்லது நல்லது' என்று ராமனைக் கொண்டாடி, ஸந்தோஷம் அடங்காமல் "மஹரிஷியே! உமக்குப் பரம மங்கள முண்டாகட்டும். ராமனை இங்கே அழைத்து வந்து, தேவ சத்துரு வான தாடகையை அழித்து, எங்களுக்குச் செய்த பரமோபகாரத் தால் நாங்கள் அடைந்த திருப்திக்கு எல்லையில்லை. ராகவனிடத் தில் தங்களுடைய அன்பிற்கு அடையாளமாகத் திவ்வியாஸ்திரங் களை உபதேசியும். பிருசாச்வரென்ற பிரஜாபதியின் புத்திரர்களும், வீணாகாத பராக்கிரமமுள்ளவர்களும், நிகரற்ற தங்களுடைய தபோபலத்தால் ஸம்பாதிக்கப்பட்டவர்களுமான அந்தத் தேவதை களைத் தரிப்பதற்குத் தகுந்தவன் ராமனே. தங்களைப் பரமகுரு வாய் நினைத்துப் பணிவிடை செய்வதில் அவனுக்கு வெகு திருப்தி. குருமுகமாகக்கிடைத்த வித்தையே விசேஷ வீரியமுள்ளது. தேவர் களுக்கு ஒரு பெரிய காரியம் இவனால் நடக்கவேண்டிய தென்று உமக்குத் தெரியாதா?" என்று அவரிடத்தில் உத்தரவு பெற்றுக் கொண்டு திரும்பிச் சென்றார்கள்.

ஸந்தியா காலமாயிற்று. தாடகாவதத்தில் மிகவும் ஸந்தோஷ மடைந்த விச்வாமித்திரர் ராமனை உச்சி முகர்ந்து, "குழந்தாய், உன்னைப் பார்த்தவர்களுக்குப் பாபம் நீங்கி ஸகல மங்களங்களும் கிடைக்குமே; ஸகல தாபங்களும் தீருமே; ஆனந்த வெள்ளம் பெருகுமே; இந்த ராத்திரி இங்கே தங்கி, காலையில் என்னிடத் திற்குப் போகலாம்" என்றார். அப்படியே அவர்கள் அவ்வனத்தில் வஸித்தார்கள். அது சாபம் நீங்கி, குபேரனுடைய சைத்ர ரதமென்ற தோட்டத்தைப் போல் வெகு ரமணீயமாய் விளங்கிற்று.

யக்ஷ புத்திரியான தாடகையை ஸம்ஹரித்து, தேவகணங்களால் கொண்டாடப்பட்டு, ரகுவீரன் அன்று ராத்திரி விச்வாமித்திரருடன் அங்கே வஸித்தார். காலையில் அந்த முனிவர் ராஜபுத்திரர்களை எழுப்பினர்.

நிஹத்ய தாம் யக்ஷஸுதாம் ஸ ராம:
ப்ரசஸ்யமான: ஸுரஸித்த ஸங்கை: |
உவாஸ தஸ்மின் முனிஞ ஸஹைவ
ப்ரபாத வேலாம் ப்ரதிபோத்யமான: || (41)



# குஜ புக்தி

ஸ்ரீ ராமசந்த்ராய நம :

## கிஷ்கிந்தா காண்டம் — 50, 51-வது ஸர்க்கங்கள்

### 50-வது ஸர்க்கம்

### ரிக்ஷபிலத்தில் புகுந்தது

ஸஹ தாராங்கதாப்யாம் து ஸங்கம்ய ஹனுமான் கபி :
விசிநோதிஸ்ம விந்த்யஸ்ய குஹாஸ்ச கஹநானி ச (1)

ஹனுமானும், தாரனும், அங்கதனும் விந்தியபர்வதத்தின் குஹைகளிலும் அதைச் சேர்ந்த காடுகளிலும் சிங்கம், புலி முதலிய துஷ்ட மிருகங்களுள்ள புதர்களிலும், ஆறுகளிலும், மலைகளின் மேடு பள்ளங்களிலும், மலையருவிகளிலும் தேடினார்கள். அதற்குள் ஸுக்ரீவன் கெடுவைத்த ஒரு மாதகாலம் கழிந்துவிட்டது. அங்குள்ள குகைகள் முதலிய ஒவ்வொருவிடங்களிலும் ஹனுமான் வெகு ஜாக்கிரதையாகத் தேடினார். கஜன், கவாக்ஷன், கவயன், சரபன், கந்தமாதனன், மைந்தன், திவிவிதன், ஸுஷேணன், ஜாம்பவான், நளன், அங்கதன், தாரன் முதலியவர்கள் மலைப் பிரதேசங்களை ஒவ்வொன்ருய்த் தேடி வருகையில், மயனென்ற தானவனால் சிருஷ்டிக்கப்பட்ட ரிக்ஷபிலமென்ற ஒரு விஸ்தாரமான குகையைக் கண்டார்கள். வானரங்கள் பசி, தாகம் மேலிட்டுக் களைத்து அங்கே வந்து, கொடிகளாலும் விருக்ஷங்களாலும் அது மூடப்பட்டிருப்பதையும், அங்கிருந்து க்ரௌஞ்சம், ஹம்ஸம் முதலிய பக்ஷிகள் ஜலத்தால் நனைந்து தாமரைத் தாதுக்களால் சிவந்து பறந்து வருவதையும், குளிர்ந்த காற்று புஷ்பங்களின் வாஸனையை கிரஹித்துக்கொண்டு அதிலிருந்து வீசுவதையும்

கண்டு, அதற்குள் ஒரு தாமரை ஓடையிருக்கவேண்டுமென்று ஸந்தேகித்து, அதில் பயமில்லாமல் பிரவேசித்தார்கள்.

அது பற்பல ஜந்துக்களால் நிறைந்து, பார்க்கப் பயங்கரமாய் நுழைவதற்கு முடியாமல், பாதாளத்தைப்போல் ஆழமுற்றிருந்தது. அப்பொழுது பர்வத சிகரத்தைப்போன்ற தேகத்துடன் விளங்கும் ஹனுமான் மற்ற வானரர்களைப் பார்த்து, நாமெல்லோரும் மலைப்பிரதேசங்களிலும் காடுகளிலும் ஸீதையை மிகவும் ஜாக்கிரதையாய்த் தேடிப் பார்த்தும் காணவில்லை. களைப்பு மேலிடுகின்றது. இந்தக் குகையிலிருந்து ஹம்ஸம், க்ரௌஞ்சம், சக்ரவாகம் முதலிய நீர்ப்பறவைகள் ஜலத்தால் நனைந்து பறந்து வருகின்றன. ஆகையால், இதில் ஓர் பெரிய கிணருவது மடுவாவதிருக்கவேண்டும். இதன் துவாரத்தில் அழகான மரங்கள் செழித்து வளர்வதைக் கண்டீர்களா?'' என்றார். பிறகு வானரர்கள் அதில் நுழைந்து பார்க்கையில், சூரிய சந்திரர்களுடைய வெளிச்சமுமில்லை ; எங்கும் இருள் மூடிப் பயங்கரமாயிருந்தது. அதிலிருந்து சிங்கம் முதலிய மிருகங்களும் வருவதைக் கண்டார்கள். பிறகு அவர்கள் அடர்ந்த இருட்டுள்ள ஓர் பிரதேசத்தில் நுழைந்து வாயு வேகமாய்ச்சென்றார்கள். அவர்களுடைய பார்வைக்கும்பிரபாவத்திற்கும் பராக்கிரமத்திற்கும் யாதொரு குறைவுமில்லை. ஆனால், அங்கிருந்த பதார்த்தங்கள் இருட்டில் கண்ணில் படவில்லை. பிறகு, ஒருவர்க்கொருவர் கைகளைப்பிடித்துக் கொண்டும் கட்டிக்கொண்டும் சென்றார்கள். அதற்குள் அவர்கள் சிரமம் மேலிட்டு பிரக்ஞையற்றுத் தாகமெடுத்து, ஜலம் ஜலமென்று கூச்சலிட்டார்கள். இப்படி வெகுதூரம் நடந்து இளைத்து முகம் வாடி, 'இனிப் பிழைக்கமாட்டோம், நிச்சயமாய் இறப்போம்', என்றெண்ணங்கொண்டார்கள்.

பிறகு பிரகாசமுள்ள ஓர் அழகான பிரதேசத்தைச் சேர்ந்து, அங்கே அநேக விருக்ஷங்கள் செழித்து வளர்வதைக் கண்டார்கள். கொழுந்துவிட்டெரியும் அக்னி ஜ்வாலைகளைப்போல் பலவகையான விருக்ஷங்கள், பொன், வெள்ளி, நவமணிகள் முதலியவைகளால் அமைக்கப்பட்ட புஷ்பங்களுடனும், இளந்தளிர்களுடனும் தங்க ஆபரணங்கள் அணிந்ததுபோல் படர்ந்திருந்த கொடிகளுடனும் விளங்கின. தங்க மயமான விருக்ஷங்களுடன் வைடூரியங்களுடன்

பாலசூரியர்களைப்போல் பிரகாசித்தன. ஓடைகள் இந்திர நீல வைடூரியங்கள்போல் தெளிந்த ஜலத்தால் நிறைந்து, தங்க மயமான மீன்களும், ஆமைகளும் அதில் ஸஞ்சரிக்க, பால சூரியர் களைப் போன்ற தங்கத் தாமரைகளுடனும் அநேக பக்ஷிகளால் சூழப்பட்டுப் பார்ப்பவர்களுடைய ஸகல சிரமத்தையும் போக்கின. தங்கம், வெள்ளிகளால் செய்த விமானங்களும், முத்து ஹாரங்கள் தொங்கவிட்ட பொன்மயமான ஜன்னல்களும், தங்கம் வெள்ளி ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட அநேக மேடைகளும் அநேக கிருஹங்களும் காணப்பட்டன. அங்கே பவழத்தைப்போலும் ரத்தினங்களைப்போலும் பிரகாசிக்கும் புஷ்பங்களுடனும், பழங் களுடனும் விளங்கும் விருக்ஷங்களிலிருந்து பெருகும் தேனைத் தங்க மயமான வண்டுகள் எப்பொழுதும் குடித்துக்கொண்டிருந்தன. தங்கத்தாலும் ரத்தினங்களாலும் விசித்திரமாய் வேலை செய்யப் பட்ட ஆஸனங்களும் படுக்கைகளும் வாஹனங்களும், தங்கம் வெள்ளி வெண்கலம் முதலிய பதார்த்தங்களால் செய்யப்பட்ட அநேக பாத்திரங்களும், அகில் முதலிய பரிமளத் திரவியங்களும், சுத்தமான பழங்களும், கிழங்குகளும், வேர்களும் உத்தமமான பானங்களும், விலையுயர்ந்த வஸ்திரங்களும், கம்பளங்களும், தோல் களும் அங்கங்கே நெருப்பு மலைகளைப்போல் குவிக்கப்பட்டிருக்கும் தங்கமும் காணப்பட்டன.

பிறகு அங்கங்கே தேடிக்கொண்டு போகையில் ஓரிடத்தில் ஒரு ஸ்த்ரீயைக் கண்டார்கள். அவள் தபஸ்வி வேஷம் தரித்து ஆஹார நியமத்துடன் விரதங்களை அனுஷ்டித்து தேஜஸால் ஜ்வலித்துக்கொண்டிருந்தாள். வானரர்கள் அவளைப் பயத்துடனும் ஆச்சரியத்துடனும் பார்த்துக்கொண்டேநின்றார்கள். ஆஞ்ஜனேயர் அந்த வயதுசென்றவளை நமஸ்கரித்துக் கைகூப்பி, "அம்மணி தாங்கள் யார்? இந்தக் குகையும் இதிலுள்ள ஐசுவரியங்களும் யாருடையது?" என்று கேட்டார்.

ததோ ஹநுமான் கிரிஸன்னிகாச :
　　க்ருதாஞ்ஜலிஸ்தா மபிவாத்ய வ்ருத்தாம் |
பப்ரச்ச கா த்வம் பவனம் பிலம் ச
　　ரத்னானி சைதானி வதஸ்வ கஸ்ய ||

### 51-வது ஸர்க்கம்

## ரிக்ஷபிலத்தின் விருத்தாந்தம்

இத்யுக்த்வா ஹனுமாம்ஸ்தத்ர புன: க்ருஷ்ணாஜினம்பராம்
அப்ரவீத் தாம் மஹாபாகாம் தாபஸீம் தர்மசாரிணீம் (1)

பிறகு ஹனுமான் அவளைப் பார்த்து, "இருள் சூழ்ந்த இந்தக் குகையில் நாங்கள் ஆவலுடன் பிரவேசித்தோம். பசி தாகம் மேலிட்டுக் களைத்திருக்கிறோம். இங்கே ஜலம் கிடைக்குமென்று நம்பிவந்தோம். இங்குள்ள ஆச்சரியங்களைக் கண்டு பயமும் ஸந்தேகமும் உண்டாகின்றன. பால சூரியர்களைப் போன்ற இந்தத் தங்கமயமான விருக்ஷங்களும், சுத்தமான காய்கனிகளும், வேர்களும், கிழங்குகளும், தங்கம் வெள்ளி ரத்தினங்களால் அமைக்கப்பட்ட விமானங்களும், கிருஹங்களும், முத்து ஹாரங்களால் அலங்கரிக்கப்பட்ட காற்றுப் போக்கிகளும், அழகான புஷ்பங்களாலும், பழங்களாலும், பரிமளத்தாலும் விளங்கும் இந்தத் தங்கமயமான விருக்ஷங்களும், ஓடைகளில் சுத்தமான ஜலத்தில் பிரகாசிக்கும் தங்கத் தாமரைகளும் பொன் மீன்களும் யாருடையது? தாங்கள் யார்? தங்களுடைய தபோபலம் எப்படிப்பட்டது? இந்த அற்புதமான ஸ்தலம் யாருடைய தபோ மஹிமையால் சிருஷ்டிக்கப்பட்டது? எங்களுக்கு யாதொன்றும் தெரியாமையால் எங்களுடைய சந்தேகத்தைத் தீர்க்க வேண்டும்" என்று பிரார்த்தித்தார். அப்பொழுது பரமதயா மூர்த்தியான அந்தத் தாபஸி, ஆஞ்ஜநேயரைப் பார்த்து, "மயனென்ற தானவன் மஹாதேஜஸ்வியும் மாயவித்தையில் நிகரற்றவனுமென்று நீங்கள் கேட்டிருக்கலாம். இந்தத் தங்கமயமான வனத்தை அவன் மாயா சக்தியால் நிர்மித்தான். பூர்வத்தில் அவன் தானவர்களுக்கு சிற்பியாயிருந்தான். இந்தக் கிருஹங்களையும் வனங்களையும் சிருஷ்டித்தவன் அவனே. அவன் பிரம்மாவைக் குறித்து நெடுங்காலம் தவம்செய்து, சுக்கிராசார்யரால் உபதேசிக்கப்பட்ட சிற்ப சாஸ்திர ஞானத்தை ஸம்பூர்ணமாய்ப் பெற்றான். அவன் இங்கே கொஞ்சகாலம் சுகமாய் வசித்திருந்தான். பிறகு, தன் புத்திரியான மந்தோதரியை ராவணனுக்கு விவாஹம் செய்து கொடுத்ததாலும், ஹேமையென்ற அப்ஸரஸிடத்தில், ரகஸியமாய் விசேஷ பிரீதி வைத்திருந்ததாலும்

